உ 

முருகன்றுணை.

திருச்செந்தூர்

# சுப்பிரமணியக்கடவுள் பேரில்.

## மாதப்பதிகம்.

திருப்பழனிவடிவேலர் பேரில்

## வாரப்பதிகம்.



இவை - அஷ்டாவதானம்

பூவை

கலியாணசுந்தரமுதலியாரால்

பரிசோதிக்கப்பட்டு

சென்னை-சூளை

நிரஞ்சனிவிலாச அச்சுயந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டன.



19 1892௵.

# திருச்செந்தூர்

# சிவசுப்பிரமணியக்கடவுள்

## பேரில் மாதப்பதிகம்.

---

### சித்திரைமாதம்.

நித்திரை தன்னிலும் பாதாரவிந்த நிதந் தொழுவேன், உத்திரஞ்சொல்லெ ன்றுபோற்றிநிற்பே னுமையாள்மகனே சத்துருசங்கார வேலையுமுன்னையுந்தான் மறவேன், சித்திரைமாதம்வருவேன் திருச்செந்திலாதிபனே. (க)

### வைகாசிமாதம்.

ஓய்யாரமானமயின்மீதிலேறி யுகந்தெனக்கு, ஐயர்வரங்கொடுத் தருள்புரிவாயரிமான்மருகா, மெய்யாறுவாயுமு

கமாறுமுன்னைக் கண்டுதொழ, வைகாசி மாதம்வருவேன்செந்தூரினில்வாழ்பவனே. (உ)

ஆனிமாதம்

வானிலுலகை யளந்தோன் மருகா வடிவேன்முருகா, மேனிமெலிந்து வாடுவேனேவினைதீருமென்று, நானிலந்தன்னிலிருந்தேயெந்நாளும்நடந்தபடி, ஆனிப்பிறந்து வருவேன்செந்தூரினி லாண்டவனே. (ங)

ஆடிமாதம்

தேடியநானுமுன் பாதாரவிந்தந்தினந்தொழுவேன், வாடியிருந்துமயங்குவனே வடிவேன்முருகா, கூடியகொன்றைக்குறமாதையுன்னையுங்கும்பிட்டநான் ஆடிப்பிறந்து வருவேன் செந்தூரினில் வாழ்கந்தனே. (௪)

## ஆவணிமாதம்.

பூவணிபூண்டகுறமாதைத்தேடிப் புணர்ந்தருகே,மாவணியேறியேவந்துநி ற்பாய் மதுராபுரியில், தாவணிதன்னில் நரியைப்பரியென்று தான்கட்டுஞ்சொக் க, ஆவணிமாதம் வருவேன்செந்தூரினி லாண்டவனே. (ரு)

## புரட்டாசிமாதம்

திகட்டாதசெங்கனி வாயமுதுண் டுதினைப்புனத்தில்,அருட்டாமலோடிவ ருவாயானைமகனே, நிரட்டானவள்ளி தெய்வானையு நின்னையு நிதந்தொழுது,பு ரட்டாசிமாதம் வருவேன்செந்தூரினில் புண்ணியனே. (சா)

## ஐப்பசியாதம்.

கற்பழியாதகுறமாதைத்தேடிக்கா னகத்தில்,கொட்பிலுநாடி யுகந்துநிற்பா

யுமையாள்மகனே, செப்பிலுஞ் செய்ய மொழியாளேயும்மையுஞ் சேவைசெய்ய, ஐபசிமாதம் வருவேன் செந்தூரினில் வாழ்கந்தனே. (எ)

கார்த்திகைமாதம்.

போத்தியாரனுன்பாதாரவிந்தம் புகழ்பெறவே, நேத்தியதாகவருள்புரிவாய்நெடியோன்மருகா, சாத்திய மாலையுந் தெய்வானையுன்னையுங்கண்டுதொழக்கார்த்திகைமாதம் வருவேன் செந்தூரினில் காங்கயனே. (அ)

மார்கழிமாதம்.

ஆறுகையின்மயின் மீதினிலேறிய அதினமுன்;பேருறுகமாகவருள்புரிவாய்புவியாளவந்த, தாறுகமானகுறமாதை

யுன்னையுந் தான்றொழுக, மார்கழிமாதம் வருவேன் செந்தூரினில் வாழ்கந்தனே.

நைமாதம்.

மையாரும்பூங்குழல் மணாளனைத்தே டிவனத்தருகே, ஒய்யாரமாக நடந்துவந் தாயுமையாள்மகனே, மெய்யானதெய்வ மென்றே யெண்ணித்தேடிவிரும்பியநா ன், தைமாதந்தோறும்வருவேன்செந்தூ ரினில்சண்முகனே. (கo)

மாசிமாதம்

மாசிப்பழனி திருவேரகம் கன்னி யாகுமரி, தேசிப்பரியென்னுஞ் சேவிக் குஞ் செங்கண்மான்மருகா, பூசியநீறை யுங்கைவேலையுங்கண்டுபுகழ்பெறநான், மாசிமாதம்வருவேன் செந்தூரினில்வா ழ்பவனே. (கக)

## பங்குனிமாதம்.

சங்குநீராடித்திருப்பாற்கடல்தன்னில்தையன் மாமருகா, எங்குநீருக நிறைந்துநிற்பா யென்னைக் காத்தருள்வாய், கங்குலமானகுறமாதை யுன்னையுங் கண்டுதொழப், பங்குனிமாதம் வருவேன்செந்தூரிற் பதிதனிலே. (௰உ)

திருச்செந்தூர் சுப்பிரமணியச்

சுவாமிபேரில் - மாதப்

பதிகம்-முற்றிற்று.

---

முருகன் றுணை.

சுப்பிரமணியக்கடவுள்பேரில்

# வாரப்பதிகம்.



## கலித்துறை.

### ஆதித்தவாரம்.

வாதித்தசூரனைவடிவே லெடுத்து வளைந்துகொண்டு, சாதித்துவென்ற தயாபரனேயெந்தன் சஞ்சலத்தைச், சோதித்துப்பார்த்து துயர்தனைநீக்கிநற்றேறுகையுடன், ஆதித்தவாரம் வருவாய்ப் முனிநல்லாண்டவனே. (க)

### சோமவாரம்.

உங்கள்தகப்பன் கரக்கனிக்காயுல கேழுஞ்சுற்றிக், கண்கள்சிவந்திட வந்

துகின்றுயர்த்தக் கடடதுபோல், எங்கள் மேற்குற்றமியாதிருந்தாலு மிரங்கிமன ந், திங்கட்கிழமை வருவாய் பழனிநற் றேசிகனே. (உ)

மங்களவாரம்.

கொவ்வாயிதழுண்ணும்வள்ளிதெ ய்வானைக் குகந்தவனே, தவ்வாயகப்பட டபாம்பதுபோலுந் தமிழ்மறையோன் அவ்வாயிற்சிக்கி யலையப்படாதடியாற் கிரங்கிச், செவ்வாய்க்கிழமையில் வரு வாய்பழனிநற் றேசிகனே. (ங)

புதவாரம்.

சதமெனும்வேதமுதலெழுத்தோ தத்தலையிற்குட்டி, விதமெனக்கேட்ட ருள் வேலவனேயென் வினையகலப்பத மதுபாடக்கவித்துறைசொல்லவும்பன்

புதந்து, புதனெனும்வாரம் வருவாய்ப
ழ்னிநற்புண்ணியனே. (௪)

## குருவாரம்.

கருவாயெழுந்திரு கைகான்முளை
த்துக் கழிந்தபின்பு-உருவாய்ப்பிறப்பித்
தவுத்தமனே யொருவுண்மைதனை திரு
வாய்மலர்ந்து முன்னின்றிடவேணுமு
ன்சேவலுடன், குருவாரநாளில்வருவாய்
பழனிநற்குருபரனே. (௫)

## சுக்கிரவாரம்.

உள்ளிற்கருதிநின் றஞ்சலி செய்
வோர்க்குவந்துவந்து, அள்ளிவிபூதியி
டுமையனேயடியார்க்கிரங்கி, வள்ளிதெ
ய்வானை யுடன்மயிலேறி மனதுகந்து,
வெள்ளிக்கிழமை வருவாய் பழனிநல்
வேலவனே.

சனிவாரம்.

சனியானபாவி யிளமையிலேயெ
ன்னைத் தான்ரொடுத்தான், இனியாகிலு
ஞ் சற்றிரங்கிலேயே மனதெப்படியோ,
பனியானதைவந்து கதிரோன்விலக்கிடு
ம் பாவனைபோல், சனிவாரநாளில் வரு
வாய்ப்பழனிநற்சண்முகனே. (எ)

திருப்பழனிவடிவேலர்பேரில்

வாரப்பதிகம்

முற்றிற்று.



